# Contents

1

# சலனக்கிரீடம்




சலனக்கிரீடம்

– கவிதைகள் –

மின்னூல் வெளியீடு :http://FreeTamilEbooks.com

ஆசிரியர் – மு. கோபி சரபோஜி

மின்னஞ்சல் – nml.saraboji@gmail.com

முகப்பு அட்டைக்கான புகைப்படம் – ராமேஸ்வரம் ராஃபி

முகப்பு அட்டை வடிவமைப்பு – லெனின் குருசாமி

2

# நன்றி

*அருவி *சஞ்சிகை *தமிழ் ஆதர்ஸ் *தமிழ் முரசு (ஆஸ்திரேலியா) *லங்காஸ்ரீ *சிகரம் *மகாகவி *திண்ணை *முத்து கமலம் *கலையருவி *தீக்கதிர்-வண்ணக்கதிர் *தி சிராங்கூன் டைம்ஸ் (சிங்கப்பூர்) *கணையாழி *கல்கி *காற்றுவெளி *வளரி *தமிழ் முரசு நாளிதழ் (சிங்கப்பூர்) *இன்மை.காம் *மலைகள்.காம் *சொல்வனம்.காம் *நந்தலாலா *கொலுசு.காம் *ஆகாயம்.காம் *பதாகை.காம்

*கவிஞர் இரா.இரவி *கவிஞர். வதிலை பிரபா (ஆசிரியர் – மகாகவி மாத இதழ்)

* freetamilebooks .com & freetamilebooksteam

**1**

# இப்போதைய கவலை!

முகஸ்துதியின் முனைகளோடு

என்னை நோக்கி

நீட்டப்படும் கோப்பைகள்

ஒருபோதும் காலியாக இருப்பதில்லை.

சுயநலத்தின் சாயலால் நுரைத்து

மாறாத நோக்கங்களின் உள்ளீடால்

முற்றாகவோ, குறைவாகவோ

அவைகள் நிரம்பியே இருகின்றன.

வெற்றுக் கோப்பைகளுக்காக

காத்திருக்கும் என் தருணங்கள்

தன் துயர் கடத்தும் நதியைப் போல

ஏமாற்றங்களோடு நகர்கின்றன.

இப்போதைய என் கவலை எல்லாம்

எவரிடமும், எதன் பொருட்டும்

நிரப்பிய கோப்பைகளை

நான் தந்துவிடக் கூடாது என்பது மட்டுமே!

2

# வடிவம் மாறி இருந்த ஊரில்

புழுதி பறக்கப் புழங்கிய வீதிகளில்

கான்கிரீட் கலவைகள்

வண்ணப் பெயர் பலகைகளுடன்

திருத்தமாய் தெருக்கள்

கால்நடையாய் போனவர்களின்

கைகளில் இருசக்கர வாகனங்கள்

ஓடுகளாகவும், மாடிகளாகவும்

உருமாறியிருந்த கூரைகள்

தொலைக்காட்சி அலைவரிசைகளில்

தொலைந்து போன முற்றங்கள்

தும்பிகள் பிடிப்பதையும் காளாண் பறிப்பதையும்

மறந்துவிட்ட குழந்தைகள் – என

அயலகம் சென்றிருந்த வருடங்களில்

வடிவம் மாறியிருந்த ஊரில்

மாறாமலே இருந்தது.

கோடாரித் தைலமும்

பச்சைக் கலர் இடைவாரும் இருந்தா கொடேன்

என்ற கோரிக்கைகள் மட்டும்!

## 3

# நேர்மை

உச்சரிப்பதைப் போல இலகுவாய் இல்லை
வாழ்க்கையில் கைக்கொள்வதும்
நித்தம் கடைப்பிடிப்பதும்.
பல நேரங்களில்
முகமாய் இல்லாமல்
முகமூடியாய் மாறி விடுகிறது.
ஏதோ ஒரு நிலையில்
எல்லா நாளும்
என்னிலிருந்து நழுவி நகர்கிறது.
மீட்டெடுத்து முகமாக்க
எத்தனிக்கும் போதெல்லாம்
பிழைக்கத்தெரியாதவன் என்ற வசையே மிஞ்சுகிறது.
ஆயினும் –
நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது
முகமூடியை முகமாக்குவதற்கான யுத்தம்!

**4**

# மரணத்திற்குப் பிந்தைய பயணம்

குடியிருப்பின் வலக்கோடியில்
ஈனுதலுக்கு காத்திருந்ததா?
உணவு விடுதி வாசல்களில்
குழவி திரிந்தவைகளில் எதுவுமா?
பிள்ளை பேறு அற்ற
முத்தப்பன் தம்பதி வளர்த்ததா?
விளையாட்டுத்திடலில்
குட்டிகள் சகிதம் ஓடி திரிந்ததா?
கடைக்கு செல்லும் போதெல்லாம்
காலிடுக்கில் சுற்றி,சுற்றி வந்ததா?
சிநேகம் நாடியோ, வேறு காரணமாகவோ
எதிர் குடியிருப்பிலிருந்து வருவதா?
எதுவென்று ஊகிப்பதற்குரிய
எந்த முகாந்திரமுமின்றி
தார்சாலையின் தடமாய்
உருமாறியிருந்த அந்த பூனைதொடங்கியிருந்தது.
தன் இறப்பின் மீதான பிறர் சந்தேகங்களை
வாகன சக்கரங்களில் ஏற்றியும்
விசிறி கிடந்த தன் ரோமங்களை
வெளியெங்கும் சுழலவைத்தும்
மரணத்திற்கு பிந்தைய
தன் பிரபஞ்ச பயணத்தை!

**5**

# அலமாரி பொம்மைகளிடம்

பள்ளியில் பெற்று வந்த

மதிப்பெண் அட்டையை

அம்மாவிடம் கொடுத்தவள்

தன் வகுப்ப்பறையை

விரித்துக் கொண்டிருந்தாள்

அலமாரி பொம்மைகளிடம்!

## 6

# சாபம்

பெல் அடிக்கும் வரை

பேசக்கூடாது என்ற ஆசிரியரை

சபித்தபடி

பேசிக் கொண்டு வந்தன

குழந்தைகள்.

7

# முற்றமும் - உரமும்

மனசாட்சியின் நீட்சியாய் நீளும்

குறியீடுகளின் முனைகளை மழித்து

முகவரி தேடிடாத இறுமாப்போடு

விரிந்து கிடக்கிறது என் முற்றம்.

குறுக்கு வழிகளைப் புறந்தள்ளி

முகமூடிகளை மறுக்கும் போதெல்லாம்

அதில் பதியமாகும்

குறியீடுகளுக்கு நானே உரமாகிறேன்.

என் முற்றம்

நானே உரம்

என்றான பின்

முறித்துக் கொள்ள என்ன இருக்கிறது?

**8**

# வடியும் காமம்

காமத்தின் கடைசிச் சொட்டை

இறக்கி வைக்கும் புள்ளியாய்

அங்க அவயங்களை அகழ்ந்தவனின்

விரல் வடுக்களால்

வடிவிழந்து கிடக்கிறது.

செதுக்கியவனின் திறனை

துருத்தி தெரியும் பாகங்களில்

காட்டி நின்றவளின்

அடர் கொங்கைகள்!

**9**

# தனக்கான வாழிடம்

இழைவதற்குள் அதன் இருப்பிடத்தை

இடம் மாற்ற வேண்டுமென

அங்கலாய்த்தார் அப்பா.

கொஞ்ச நாளில்

அதுவே இடம் பெயருமென

அன்பு காட்டினாள் அம்மா.

எத்தனைக் குஞ்சுகள் வருமென

கணக்குப் போட்டு

காத்திருந்தாள் தங்கை.

பகல் நேரக் கீச்சுகளால்

தொந்தரவாய் போயிற்றென

எரிச்சலடைந்தான் அண்ணன்.

எதிர்ப்புகளுக்கும்

எதிர்பார்ப்புகளுக்கும் மத்தியில்

தனக்கான வாழ்விடத்தை

உறுதி செய்யத் துவங்கியிருந்தது அந்தக்குருவி!

**10**

# சுய சிதைவு

சுமந்து வந்த தலைப்பாகை

தன்னியல்பை இழக்கத் தயாராயிருந்தது.

போட்டு வந்த மேல்சட்டை

எடுப்பார் பிள்ளையாக எதிர்பார்த்திருந்தது.

புறம் தள்ளி வந்த காலணிகள்

யார் வரவுக்கோ காத்திருந்தது.

இருபது வருடமாய் தொடரும் நிகழ்வு என்பதால்

அதைரியம் குறைந்திருந்தபோதும்...

உள்ளாடையற்ற கால்சட்டையை

பதறியபடியே பற்றி நிற்கிறது கைகளிரண்டும்!

11

# எப்பொழுது?

மழை இறங்கும் தருணமெல்லாம்

கவிதைக்காக வார்த்தைகள் தேடி

அலைந்து திரிகின்றாய்.

எப்பொழுது

இறங்கும் மழையில் இறங்கி

மழையாகப் போகிறாய்?

**12**

# மாற்றங்கள்

திசை நான்கும் தினமென

ஓடிக்கொண்டிருந்த உன்னிடம்

இப்பொழுதெல்லாம் நிறைய மாற்றங்கள்.

நிர்வாகச் சீர்திருத்தமென

நம் நிறுவனப் பங்குகளை

என் பெயருக்கு மடை மாற்றுகிறாய்.

சட்டச் சிக்கல்கள் வருமென

சேமிப்புகளில் எல்லாம்

என்னை வாரிசாய் உறுதி செய்கிறாய்.

எவருக்காகவும் இழக்க விரும்பாத

உன் பொழுதுகளை

என் பொழுதாக்கிச் செரிக்க அனுமதிக்கிறாய்.

நடப்பதெல்லாம் கனவோ என

பிரமை கொள்ளும் அளவுக்கு

உன் இறுக்கத்தில் என்னை நெருக்கமாக்குகிறாய்

எல்லாவற்றையும்

திட்டமிட்டே செய்யும் நீ

திட்டமிட்டேனும் மறைத்திருக்கலாம்

புற்றுச் செல்களால் சிதைந்து வரும்

உன் தேகம் குறித்த

மருத்துவ அறிக்கையையும்!

**13**

# விளைநிலம்

விளைந்த நிலமாய் – விளையும் நிலமாய்
இருப்பவைகளை நாகரீக வாழ்வுக்காய்
விலை நிலமாய் மாற்றி அமைத்தோம்.
சர்ப்பத்தின் புணர்வுபோல
அடி பெருத்து நுனி சிறுத்த கல்மரத்தை
விளைநிலம் தோறும் நட்டு வைத்தோம்.
முப்போகம் விளைய வைத்து
உணவிட்டவனின் தற்கொலைக்கு
கணினியில் கையறு நிலை பாடினோம்.
ஏட்டுப்படிப்பு போதுமென நினைத்த நாம்
ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது என்பதை
ஏன் மறந்து போனோம்?
கண்ணை விற்று சித்திரம் வாங்கும் உண்மையை
கையூட்டிற்காய் பணியை இழக்கும் அபாயத்தை
எப்பொழுது உணரப் போகின்றோம்?
கழனிப்பானையவும் களத்து மேட்டையும்
தொலைத்த அவலத்தை
கல்லையும் மண்ணையும் தின்றா போக்க முடியும்?
இனி ஒரு விதி செய்து மாற்ற முடியாவிட்டாலும்

இனி ஒரு விளை நிலத்தையும்

விலை நிலமாய் – மனை நிலமாய் மாற்றாதிருப்போமே!

**14**

# நினைவுகளின் துளிர்ப்பு

தூரத்து வானமாய்

எட்டாமலே போனது

நமக்குள் ஊடேறி கவிழ்ந்திருந்த நினைவுகள்.

கரைசேர வந்த அலையை

அள்ளிச்செல்லும் கடலாய்

நினைவுகளை வாரிக் கொண்டு திரும்பினோம்.

எடுத்துச் செல்லும் வரை தெரியவில்லை

நான் உனக்கானதையும்

நீ எனக்கானதையும் எடுத்துப் போகிறோமென்று.

திருப்பங்கள் நிறைந்த வாழ்க்கையில்

விதையாய் விழுந்திருந்த நினைவுகள்

உச்சரிப்பின் உவப்பில் துளிர்த்துக்
கொண்டேயிருக்கிறது.

என் பெயர் தாங்கிய உன் மகனாய்

உன் பெயர் தாங்கிய என் மகளாய்

அவரவர் வீட்டில்!

**15**

# விதிவிலக்கு

அம்மாவின் குறை சொல்லல்

அப்பாவின் குற்றம் காணல்

சகோதரியின் சீண்டல்கள்

சகோதரனின் எதிர்வினைகள்

பிள்ளைகளின் உபத்திரங்கள்

உறவுகளுக்குரிய செய்முறைகள்

தவணைக்காக காத்திருக்கும் தேதிகள்

இவைகளோடு

இயலாமைகளின் ஆற்றாமையையும்

இல்லாளிடமிருந்து

நாள்தவறாது கடத்தி வரும்

அலைபேசியின் அதிர்வலைகள்

விதிவிலக்காய் ஏந்தி வருகிறது.

தூக்கம் செரிக்கா சில பின்னிரவுகளில்

அவளின் சப்தமில்லா மென் முத்தங்களையும்

காலத்தால் காயாதிருக்கும் ஈர நினைவுகளையும்!

**16**

# சகுனியிடம் தோற்ற தருமராய்

ஒவ்வொரு முறையும்
தந்திர விருத்தங்களால்
என் கட்டங்களை ஆக்கிரமித்தும்
திசை திறப்பிற்காக
காத்திருந்த தருணங்களில்
கருணையின்றி வெட்டி எறிந்தும்
தந்திரம் உணராது
தடுமாறிய சந்தர்ப்பத்தில்
பன்னிரெண்டால் பழமெடுத்தும்
பெருமை சாற்றும் உன்னிடம்
ஒரு விருத்தம் வழியேனும்
நேர்த்தியாய் பழமெடுத்து
நிலைநிறுத்திக் கொள்ள
எத்தனித்துக் கொண்டேயிருக்கின்றன.
சகுனியிடம் தோற்ற தருமராய்
ஒவ்வொரு முறையும்
புறந்தள்ளப்படும் என் காய்கள்!

**17**

# வாக்குறுதி

உச்சரிப்பதைப் போல இலகுவாய் இல்லை

பிறருக்குக் கொடுப்பதும்

கொடுத்ததை நிறைவேற்றுவதும்.

பல நேரங்களில்

நம்பிக்கையாகத் தரப்பட்டும்

அவநம்பிக்கையாய் நீர்த்து விடுகிறது.

ஏதோ ஒரு நிலையில்

பொய்யான காரணங்களுக்குள்

கரைந்து போய் விடுகிறது.

நிறைவேற்றி தருவதற்காக

மெனக்கெடும் போதெல்லாம்

சில உபதேசங்களே மிஞ்சுகிறது.

கொடுத்த வாக்குறுதியைக் காக்க

கடவுள் கூட

சுணங்கி நிற்கும் யுகத்தில்.....

கொடுப்பதை விடவும் மறுக்கவே விழைகிறேன்

நிறைவேறும் வரை

நம்பிக்கையற்று நகரும் வாக்குறுதியை!

## 18

# தட்சணை

காற்றின்
திசைக்கேற்ப பறக்கும்
நுணுக்கத்தையும்
வல்லூறுகளிடமிருந்து
தப்பிக்கும் தந்திரத்தையும்
சொல்லித் தந்து
ஒரு பறவையாய் மாற்றியவர்
தட்சணையாய் கேட்டார்
சிறகுகளை!

## 19

# நீலவானமாக்கியபடி!

விரிந்து கிடந்த வெளியை

நீல வானமாக்கி

பச்சை தரையாக்கி

அப்படியும், இப்படியுமாய்

விழி விரித்து நோக்கிய அபி

சாரல் துளிகளாய்

மழையை இறக்கினான்.

சட்டென

கிளைகளும், இலைகளுமாய்

நெடுதுயர் கழிகளை நட்டு

பட்சிகளுக்கு இடமளித்தவனிடம்

இருக்கையும் போடு என்றேன்.

மறுத்தவன்

வண்ண வண்ணப் பூக்களை

விதைத்து விட்டு

காடு என பெயரிட்டு

அழுத்தமாய் அடிக்கோடிட்டான்.

பூங்கா பார்த்தே புழங்கிய நான்

இப்படியா இருக்கும் காடு? என்றேன்

இப்படியும் இருக்கும் என்றான்

விரிந்து கிடந்த வெளியை

நீல வானமாக்கிய படி!

**20**

# நானும்.......நானும்

நானும்

நானும்

சந்தித்து கொள்வதற்கான தருணங்கள்

வெகு அபூர்வமாகவே அமைகின்றன.

சொற்ப ஆயுளுடன் அமையும்

அத்தகைய தருணங்களில் எல்லாம்

ஏதாவது ஒரு நான்

எவர் வழியாவது இடம் பெயர்ந்துவிடுகிறது.

தனித்து விடப்பட்ட ’நான்’ தான்

நானா? என்ற சந்தேகம்

சூலியாய் மாறி

சூறையாடி விடுகிறது எஞ்சிய பொழுதுகளை.

இனி ஒரு தருணத்தில்

இரு நானும் சந்திக்கும் போது

இரக்கமின்றி சொல்லி விட வேண்டும்

யாராவது ஒருவர்

தற்கொலை செய்து கொள்ளுங்கள் என்று!

**21**

# பெண்டுல மனசு

தவிர்த்திருக்கக் கூடிய
சாத்தியங்கள் இருந்தும்
தர்க்க ரீதியாய் ஏற்றுக் கொண்ட
சுவடுகளில் குதித்து ஓடுகிறது காலம்.
ஆண்டுகளைத் தின்று
செரித்துப் புதைந்த பாதத்தின்
ஆறாம் விரல்களின் வெற்றிடத்தை
மறைத்து நிற்கின்றன கரையோரப் புற்கள்.
குழுமைக்குள் விட்டு வந்தவைகளில்
மக்கி உளுத்தது போக
உள்ளங்கைகளில் உறைந்தவைகள்
காலத்திற்கு ஒவ்வாதவைகளாகின.
தன் வேரடியின் மீது
தடம் பதித்த பேருந்தின் கூரையில்
கிளை உதறிய மலராய்
இன்னொரு வேரடி தேடி நீள்கிறது பயணம்.
புலப்பட்டுப் பயணித்த புள்ளிக்கும்
கானலாகி எழும் புள்ளிக்கும் இடையே
முட்களின் முனங்களோடு நகரும்

பெண்டுலமாய் ஆடிக் கொண்டிருக்கிறது மனசு!

**22**

# பொதிந்து கிடக்கும் வெற்றி

வெற்றியை எட்டும் ஆயத்தத்திற்காக
வேட்டைக்கு எத்தனிக்கும் விலங்காய்
பயிற்றுவிக்கப்பட்ட வித்தைகளுக்குள்
முடங்கிப் போனது பால்யம்.
தோள் தட்டும் தோல்விகள்
அகம் பாயும் கீழறுப்புகள் என
கீழ்மையின் நிலை தாண்டி
மேலெழ முயன்றதில் கழிந்தது வாலிபம்.
எட்டிப் பிடிக்க நினைத்த வெற்றி
அந்திமத்திலாவது வாய்க்குமா? என்ற வாதனை
எஞ்சிய வாழ்வின் முகத்துவாரங்களை
அரித்துக் கொண்டே இருக்கிறது.
முயன்றால் முடியும்
வெற்றி எட்டிவிடும் தூரமே என
போதிக்கப்பட்டவைகளுக்குள்
இன்னும் பொதிந்து கிடக்கிறது வெற்றி!

## 23

# "திக்”கைத் தரும் நினைவுகள்

புதிதாய் பயணிக்கும் வழித்தடத்தில்

சட்டென நுழையும் திருப்பமாய்

ஊடுருவிய நினைவுகளால்

சூல் கொண்டு கிடக்கிறது மனது.

அகழ்ந்தெடுத்த வடுவாய் பதியமான

அவைகளின் கோரப் பற்கள்

தழுவல்களாய் நிற்கும் சுக நினைவுகளைக்

கீறிச் சுவைத்துக் கொண்டேயிருக்கிறது நித்தமும்.

கூடடைய மீளும் பறவையாய்

உழிந்து விட மெனக்கெடும் போதெல்லாம்

புதிதாய் ஒன்று பதியமாகி விடுகிறது

அதே சாயல் தரித்த வேகப் பாய்ச்சலில்!

திருப்பங்களைத் தந்து போன நினைவுகளை விடவும்

திருப்பங்களைத் தரக் காத்திருக்கும் நினைவுகள்

எப்பொழுதும்

”திக்”கைத்தருபவைகளாகவே இருக்கின்றன.

**24**

# அவன் உணர்த்திய ஆரம்பத் துயரம்

நடைமுடிந்து திரும்பி வந்த கணம்

எனக்காகவே காத்திருந்தவனாய்

மடிமுழுக்க அட்டைகளும்

வண்ணக்குச்சிகளும்

உருளையிலிட்ட ஒட்டுப்பசையுமாய்

என்னருகில் வந்தமர்ந்தான் அபி.

சில அறைகளுடன் கூடிய வீடாய்

அட்டைகளை உருமாற்றியவன்

அந்தச் சின்ன வீட்டிலும்

தனக்கென ஒரு அறை ஒதுக்கி

என் வழி உறுதியும் செய்து கொண்டான்.

முடிந்துபோன முகபாவனையுடன்

முன்கண் உயர்த்தியவனிடம்

யாருக்கு இந்த வீடு? என்றேன்.

பணித்திருந்த கண்களோடு

கட்டியணைத்துக் கொண்ட

அந்த ஆறு வயது கரங்களில் கனறத் தொடங்கியது

தனிமையின் ஆரம்பத் துயரம்!

**25**

# மூன்றடி ஆரவாரங்கள்

பழுத்ததை உதிர்த்து
பருவங்கள் காட்டுகிறது
மரம்

•

வனப்பில் நின்று
வறுமையைக் காட்டுகின்றன
அலமாரி அங்கீகாரங்கள்

•

எல்லை தாண்டல்கள்
ஏற்கப்படுகின்றன
பறவைகளின் பயணம்

•

வேண்டுதல்களின் போதெல்லாம்
விட்டு விடுதலையாகின்றன
வாயில்லா ஜீவன்கள்

•

கடைசி பந்தமும்
கை கழுவியது
உதிர்ந்து விழும் இலை

- 

நகரவாழ்வுக்கு

பழகிவிட்டன பறவைகள்

அடுக்ககத்தில் கூடு

- 

ஏந்திச் செல்கிறது

நிர்வாணத்தை

ஆடை

- 

உயிரற்ற சிலை

உயிர் பெறுகிறது

கர்ப்பகிரகம்

- 

தேவையற்றதை இழந்து

தெய்வமானது

பாறை

- 

யாத்திரைக்கு

தயாராகி விட்டது

உதட்டுச்சாயமேறிய கோப்பை

- 

சங்கமமாவதற்குள்

ஓராயிரம் சலசலப்பு

நதிகளின் ஓட்டம்

- 

வேட்கையும், வேதனையும்

வேரறுந்து சாய்கிறது

விடியலுக்கு முந்திய இரவு

- 

கூடலுக்கான அழைப்பை

மீற முடியவில்லை

திரும்பி ஓடும் அலைகள்

- 

தோல் உரித்து

உயிர் பெறுகிறது

பென்சில்

- 

மோகத்தில் கணவன்

வெட்கத்தில் மனைவி

ஆடையற்ற பால்

- 

இரதங்கள் கிளம்பின

வதங்கள் செய்ய

அரசியல் யாத்திரை

•

ஆயிரம் ஏக்கர் மடத்தில்

பகட்டாய் தொடங்கியது

“பற்றற்று இரு” வகுப்பு

•

பெருங்கோபத்துடன்

புணர்தலுக்குத் தயாரானது

மழை

•

தரத்தவறிய பணம்

மாறி,மாறி வந்து போனது முகம்

அஞ்சலிக் கூட்டம்

•

பேசாமல் பேச

பழகிக் கொண்டிருந்தது குழந்தை

பள்ளிக்கூடம்

•

பவனி வர யானை

பல்லக்குத் தூக்கப் பக்தன்

சோம்பேறியாய் கடவுள்

•

பாறையிடுக்கிலிருந்து

எழும்பி வந்தது எச்சம்

தன்னம்பிக்கை

•

சவமாகிக் கிடந்தது

வீடும், வீதியும்

பள்ளி சென்று விட்ட குழந்தைகள்.

•

களத்துமேடு செல்ல

காத்துக்கிடக்கிறது கதிர்

முதிர் கன்னி

•

நரகாசுரனை அழிப்பதற்குள்

கிருஷ்ணர்கள் பலி

பட்டாசு ஆலை விபத்து

•

இரண்டாம் பந்திக்காக

காத்திருந்தார்கள்

எச்சில் உணவு பொறுக்குபவர்கள்

•

தழுவலுக்காக

தவித்திருக்கிறது கரை

வற்றிய நதி

•

கர்ப்பகிரகத்திற்குள் இருப்பவனும் சாமி

கற்பூரம் காட்டுபவனும் சாமி

முட்டாளாய் பக்தன்

•

யாருக்கு முதல் பரிவட்டம்

முட்டிக்கொண்ட பங்காளிகள்

இரசித்தபடி கடவுள்

•

தீயில் குளித்தாள்

தீயால் குளிக்க வைத்தாள்

கணவனின் கறை போக்க!

•

குழிகளுக்குள்

குவிந்து கிடக்கிறது

ஈழம்

•

இடம் மாறிக் காத்திருக்கின்றனர்

கடவுளும், பிச்சைக்காரர்களும்

தட்சணையும், தருமமும்!

•

தன்னை மாய்த்து

அவன் தரித்திரம் போக்கியது

திருஷ்டிப் பூசணிக்காய்

•

காளைகளுமில்லை

கழனிப்பானையுமில்லை

கதிர் அறுக்கும் கருவி!

•

அவதார நம்பிக்கைகளில்

ஆணியடிக்கப்பட்ட மக்கள்

ஆசிரமத்தில் இறை வழிபாடு!

•

சாளரத்தைச் சாத்து

காற்று வெளியேறுகிறது

குளிர்சாதன அறை.

•

1

# மு. கோபி சரபோஜி



இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள அழகன்குளம் என்ற கிராமத்தில் பிறந்தவர். அறிவியலில் இளங்கலைப் பட்டமும், தமிழில் முதுகலைப் பட்டமும் பெற்றவர்.. கவிதை, கட்டுரை, வாழ்க்கை வரலாறு, தன்னம்பிக்கை, வரலாறு, சிறுகதை, ஆன்மிகம், நாவல், விமர்சனம் என அனைத்துத் தளங்களிலும் பயணித்து வருகிறார்,
கல்கி, பாக்யா, கணையாழி, சிகரம், வெற்றிநடை, மகாகவி, அந்திமழை, தமிழ்முரசு, தி சிராங்கூன் டைம்ஸ், கருந்துளை, தீக்கதிர்-வண்ணக்கதிர், அருவி, உயிர் எழுத்து, வாதினி, தமிழ் இந்து, கலைஞன் உள்ளிட்ட அச்சு இதழ்களிலும் –

பதிவுகள், கீற்று, திண்ணை, வார்ப்பு, மலைகள், சொல்வனம், நிலாச்சாரல், உயிரோசை, அதீதம், வினவு, கலையருவி, வல்லமை, எதுவரை?, முத்துக்கமலம், இன்மை, எழுத்து, லங்காஸ்ரீ, யாவரும்.காம், நந்தலாலா, கொலுசு, காற்றுவெளி, தழல், செம்பருத்தி,பதாகை உள்ளிட்ட இணைய இதழ்களிலும் இவரின்

படைப்புகள் வெளிவந்துள்ளன.

மணிமேகலைப் பிரசுரம், நிவேதிதா பதிப்பகம், தீபம் வெளியீட்டகம், கிழக்கு பதிப்பகம், கற்பகம் புத்தகாலயம், காளீஸ்வரி பதிப்பகம், விகடன் பிரசுரம், அருணா பப்ளிகேஷன்ஸ், விஜயா பதிப்பகம், நக்கீரன் பதிப்பகம், அகநாழிகை, வின்வின் புக்ஸ், சிக்ஸ்த்சென்ஸ் பப்ளிகேஷன்ஸ் ஆகிய பதிப்பகங்கள் வழியாக இதுவரை 24 நூல்கள் வெளி வந்துள்ளன.

இந்நூல் இவரின் முதல் மின் நூல்.

ஆசிரியரின் – மின்னஞ்சல் முகவரி :
nml.saraboji@gmail.com
வலைப்பக்க முகவரி : gobisaraboji.blogspot.com/

# 2

# FREE TAMILEBOOKS - எங்களைப்பற்றி

மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை" வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது.

சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FreeTamilEbooks.com**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல்

எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. www.vinavu.com
2. www.badriseshadri.in
3. http://maattru.com
4. kaniyam.com
5. blog.ravidreams.net

எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் **Creative Commons** உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை
பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை

நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : **freetamilebooksteam@gmail.com**
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G +: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலை**freetamilebooksteam@gmail.com** எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

தவிர்க்க வேண்டியவைகள் யாவை?

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- **email : freetamilebooksteam@gmail.com**
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/

communities/108817760492177970948

இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**Supported by**

- Free Software Foundation TamilNadu, www.fsftn.org
- Yavarukkum Software Foundation http://www.yavarkkum.org/

3

# உங்கள் படைப்புகளை வெளியிடலாமே

உங்கள் படைப்புகளை மின்னூலாக வெளியிடலாம்.

1. எங்கள் திட்டம் பற்றி –http://freetamilebooks.com/about-the-project/

தமிழில் காணொளி – http://www.youtube.com/watch?v=Mu_OVA4qY8I

1. படைப்புகளை யாவரும் பகிரும் உரிமை தரும் கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் பற்றி –

http://www.wired.co.uk/news/archive/2011-12/13/creative-commons-101

https://learn.canvas.net/courses/4/wiki/creative-commons-licenses

உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமத்தை இங்கே தேர்ந்தெடுக்கலாம்.

http://creativecommons.org/choose/

3.

மேற்கண்டவற்றை பார்த்த / படித்த பின், உங்கள் படைப்புகளை மின்னூலாக மாற்ற
பின்வரும் தகவல்களை எங்களுக்கு அனுப்பவும்.

1. நூலின் பெயர்
2. நூல் அறிமுக உரை
3. நூல் ஆசிரியர் அறிமுக உரை
4. உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம்
5. நூல் – text / html / LibreOffice odt/ MS office doc வடிவங்களில். அல்லது வலைப்பதிவு / இணைய

தளங்களில் உள்ள கட்டுரைகளில் தொடுப்புகள் (url)

இவற்றை freetamilebooksteam@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

விரைவில் மின்னூல் உருவாக்கி வெளியிடுவோம்.

---

நீங்களும் மின்னூல் உருவாக்கிட உதவலாம்.

மின்னூல் எப்படி உருவாக்குகிறோம்? –

தமிழில் காணொளி – https://www.youtube.com/watch?v=bXNBwGUDhRs

இதன் உரை வடிவம் ஆங்கிலத்தில் – http://bit.ly/create-ebook

எங்கள் மின்னஞ்சல் குழுவில் இணைந்து உதவலாம். https://groups.google.com/forum/#!forum/freetamilebooks

நன்றி !